ஓம்.

திருச்சிற்றம்பலம்.

# நடராஜ தர்பார்

## தனுர்மாசம்

## திருவாதிரை நக்ஷத்திர

## ஆருத்ரா தரிசனாராதன பத்திரம்.



தில்லைத்தல பக்தஜன பரிசன்னிய பரிபக்குவார்ச்சினீயப்

பிரசாதம்.

தில்லைவாழந்தணர்தம்தேசிகனும்தாசன்பார்த்து
எல்லையிலாவானந்தநடம்பார்ப்பான்பாரினின்று
தில்லைவரும்பக்தர்கள்பரிபக்குவர்பலருமுய்யப்பரிவுகூர்ந்து
எல்லையிலாக்கருணைநிறைசிவகாமியம்மைஏதமறவழங்குகவென்றேவினளே

ஸ்ரீ அகண்டானந்தசத்குருவேநம:

ஓம்தத்ஸத்.

## SPECIAL NUMBER

**In Adoration of the Infinite-Be-ing Subjecting Itself**
Out of Infinite Grace and Love to Man
**To the limitations of a Finite-Be-ing-in-Time-Place-and,-Nature**
That unripe souls unable to Comprehend and Worship God in spirit and in truth
**May conceive and pay Homage to Him in a Finite Form**
(As Lord of the World and King of kings)
**Which is but a Symbol of the Infinity**
*Which Alone Exists. Om Tat Sat.*

"I speak the things which I have seen with the Father."—John viii—38.
"He that hath ears to hear, let him hear."—Matt. xi—15.
"If any man be a worshipper of God, and doeth His will, him He heareth."—Christ.

**Dedicated by Order of Grace**
**To All Ripe Souls on Earth Thirsting for Truth and Realisation.**
"I have given unto them the words which Thou gavest me."—John xvii—8.

**Hail! Ananda Natesa!**

*Adoration to Sri Akandananda, the Teacher of Truth!*

**Om Tat Sat.**

உ

ஓம்.

## சத்தியானந்தசபை.

சத்தியமேவிதி-சத்தியமேகதி: சத்தியமேஜயம்: ஓம் தத்ஸத்.



ஆநந்த நடேசாயநம:.

# "ANANDA MISSION"

### For the Propagation of Truth & Knowledge.

First conceived at Chithambaram after the Arudra Darisanam of 1901,
On the Motion of an Eminent Englishman who Thirsted for a moment
IN THE HOLY PRESENCE OF THE LORD OF THE WORLD,
To Know the Truth of the Holy Mystery "*Chidambara Rahasyam*";
And Called into Existence Now By His Almighty Grace
At the Instance of a True Englishman Thirsting to Know
**"THE TRUTH AS IT PRESENTS ITSELF NOW"**
To a seeker who seeks it "without reference to this or that
more or less imaginary divine system."
Planned by Grace of the Lord on Xmas Eve, 1902,
And Founded on Thursday week of the New Year, 1903,
Being the third Bright day preceding the Resplendant Arudra Darisanam.

*"Ekam Satyam Brahma."—Sruti Vâk.*
"Seek Truth wherever you can find it," My Friend,
But Make your Choice and Stick to It till You reach the End.
"*Truth is Hard Finding!*" Yes, "*Uncompromising too*" when *whole*
Yet, Try! "*Awake, Arise and Stop not till you reach the Goal.*"—*Sruti.*
"And Ye shall Know the Truth and the Truth shall Make you Free."—Christ.

All persons who love Truth for its own sake and are willing to show good-will towards All, regardless of race, creed, religion, caste or color, will be elegible to become members, helpers or sympathisers of the Mission as it may suit their intelligence, development and selfless state.

Sincerity in thought, word and deed, an essential and unfailing condition to be scrupulously fulfilled by all. ***Satyameva Jayati.***



Hail! Ananda Natesa!
*Sri Akandananda Satguruve Namaha.*





"I am—God to the Godly; Christ to the Christian; Buddha to the Buddhist; Unknowable to the Agnostic; Nature to the Athiest; Law to the Scientist; and Truth to All—The End, the Aim, the Law of Life."—*Sri Akandananda.*

லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணா.
பழைய பிரதி, 6 ,,

சந்தாவின் விவரம்.
ஒரு வருஷத்துக்கு ரூ. 4.
6 மாதத்துக்கு ,, 2-2




அறிவைப்பரவச் செய்வதற்கான

மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

*The Publishing Agency reserves to itself the right of republishing separately matters that appear in the Viveka Chintamani.*

புத்தகம் 11.] 1902ஆம் நவம்பர், டிசம்பர்மீ. [இலக்கம் 7-8.

## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy 7½ As. : Back Nos. 8 As. each.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION 7*s*. 6*d*. NET PER ANNUM.

**Thin Paper Edition** for the People :—

SUBSCRN. PRICE : YEARLY RS. 4 ; HALF-YEARLY RS. 2-2.

SINGLE COPY, CURRENT NO. 5½ AS. ; BACK NOS. 6 AS. EACH.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION 5*s*. 6*d*. NET PER ANNUM.

**If strictly Prepaid** at the commencement of the term, (*i. e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As. off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year.

☞ To regular annual subscribers 2 months' grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P. to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and are vexatious delay and needless correspondence.

## விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

தளமான காகிதப்பதிப்பு :—அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி 7½ அணா. பழைய பிரதி 8 அணா.

லேசானகாகிதப்பதிப்பு :—சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.

தனிப்பிரதி 5½ அணா. பழைய பிரதி 6 அணா.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவறாமல் கட்டினால் வருஷசந்தாவில் 8 அணாவும், 6 மாச சந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

எப்ரல் அல்லது மேமாசம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தாதாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

☞ வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்துகொடுக்கப்படும்.

…த்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் அதாவது எப்ரல் அல்லது மே மாசத்திலே நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும்போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்குவரவுக்கும் இடமிராது.

## IN THE SUPREME COURT OF THE KING OF KINGS.

An Ancient Appeal on the Original Suit for the Recovery of the Father's Estate.

பராபரன்கோர்ட்டில்

# ஓர் புராதனவழக்கு.

## பிதிரார்ஜ்ஜித சொத்துக்குப் பாத்தியம்.

---

திட்டகுடி லோகல்பண்டு ஸ்கூல் ஹெட் மாஸ்டர் நடராஜபிள்ளை நமக்குப் பின்வருமாறு எழுதுகிறார் :—

"ஐயா,—நிகழும் நவம்பர்மீ கூடிய திட்டக்குடி உபாத்திமார்கள் சங்கத்து மீட்டிங்கு, வெகு விமரிசையாக நடந்தேறியது. திட்டக்குடி டெப்டி தாசில்தார், போலீஸ் இன்ஸ்பெக்டர், ரெவினியூ இன்ஸ்பெக்டர், ஸால்ட் ஸப் இன்ஸ்பெக்டர், யூனியன் சேர்மென்,—மேற்படியார்கள் ஆபீசின் கிளர்க்குகள், திட்டக்குடியின் இன்னுமநேகமான இதர கனவான்கள் வந்திருந்தார்கள். திட்டக்குடி ஸப் ரிஜிஸ்திரார் ம-ா-ா-ஸ்ரீ, வி. எஸ். விஸ்வநாதய்யர், பி. எ., சேர்மெனாக இருந்து மீட்டிங்கை நடத்தினர். அதில், ஊர் கிராம முனிஸீபினல் ஒருபிரியாது படிக்கப்பட்டது. மீட்டிங் சேர்மென் சொன்னபடி, அதை விவேகசிந்தாமணியில், பிரசுரம்செய்யும்படியாக, இத்துடன் எழுதி அனுப்பி இருக்கிறேன். விவேகசிந்தாமணியைப் படிப்பவர்களில், யாராவது மஹான்கள், அந்தப் பிரியாதை அங்கிகரித்து, அதைப் பிரசுரமூலியமாய், விசாரிக்கத் தொடங்கி, ஜெட்ஜ்-மெண்டு கொடுக்கவேணுமாய், ஷை மீட்டிங்கை நடத்திய சேர்மெனல் கேட்டுக் கொள்ளப்படுகிறது."

## பிரியாது.

சகல உலகங்களுக்கும், ஞாயாதிபதி கர்த்தர்களாகிய, தர்மதுரை அவர்கள் சமுகத்திற்கு :—

காயாபுரியைச் சேர்ந்த, சிரமங்கலம் தாலூகா, மண்டல மாகாணத்தைச் சேர்ந்த கருஊரிலிருக்கும், பரமானந்தய்யர் குமாரன், சுக்கில ஜாதி, ஸத்திபமதம், ஒரே வயதுள்ள ஆத்மநாதன் ... ... ... வாதி.

ஷை மண்டல மாகாணத்தைச் சேர்ந்த, கோஸமாபுரத்திலிருக்கும் காமினுதன் 1, மூல வெங்கண ஆங்காரச் சேருகாரன் 2, ஆதம்பட்டு பிச்சியாப்பிள்ளை 3, கவலப்பட்டு ஸந்தேகமுதலியார் 4, நாவல்ப்பட்டு அரிசிவபெருமாபிள்ளை 5, கண்ணனூர் பார்வமுதலியார் 6, செவியத்தூர் கேழ்விருயப்பிள்ளை 7, மூக்கானந்தய்யர் 8, பக்கபாக்கம் ஸ்பரிசயாப்பிள்ளை 9 ... பிரதிவாதிகள்.

மேற்படி வாதி எழுதிக்கொண்ட பிரியாது, என்னவென்றல், எனது பூர்வீக அனுபோகமான ஸ்வயம்பிரகாசக் கணவாயி-ஞானச்செய்-தழைநிலம்காணி 1. இந்த ஒரு காணி நிலமும், எனது பார்வைத் தாழ்வினல், அக்ஞானகுளமென்று தரிசுஆகக்கிடந்தது. அதை நான் முக்தி-விவசாயம் செய்யவேணுமென்று முயற்சிசெய்த காலத்தில், மேல்கண்ட (9) ஒன்பது பேர்களும், ஒருவன் பின்னுக ஒருவன் கூட்டம் கூடிக்கொண்டு வந்து, எனது விவேக ஏரை ஓட்டவொட்டாமல் தடுத்து, மனக் கொழுவை முறித்து, புத்திக் கலப்பையை ஒடித்து, சித்த

மேழியைப் பிளந்து, என்னையும் இன்னாரினியார் என்று தோணவொட்டாமல், அவிவேகத் தடியால் அடித்தார்கள். அதற்கு சாக்ஷிகள் சதுர்விவேகநகர் கல்வியாப்பிள்ளை 1, சாதகத்தூர் தத்துவ முதலியார் 2, ஓமாந்தூர் ப்ரணவமூர்த்தியாப்பிள்ளை 3, உச்சிவிவேகத்தாள்வீட்டு ஸோமசுந்தரம்பிள்ளை 4, உள்ளம்பாக்கம் ஸ்பர்ஸியாப்பிள்ளை 5, இந்த ஐந்து பேர்வழிகளையும் வரவழைத்து விசாரணைசெய்து, எனது பூர்வீக அனுபோகமான ஸ்வயம்பிரகாச-க்கணவாயி-ஞானச்செய்·தழைநிலம் காணி 1.—இந்த ஒரு காணி நிலமும் எனக்குக் கிடைக்கும்படி மன்றாடிப் பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

| | |
|---|---|
| அந்த வருஷம் வந்தமாஸம் - இந்தத்தேதி. | வாதி வக்கீல் :—நாதகர்த்தன். <br> பிரதிவாதி வக்கீல் :—தத்து - பித்து. |

---

[இப்பிரியாதை நாம் மேற்போட்டுக் கொண்டு விசாரிப்பது சாத்தியமின்மையால் இதை இவ்விவேகசிந்தாமணி யேற்படுவதற்குக் காரணபூதமாயிருந்த மாயாண்டிவச மனுப்பிவிட்டோம். அவர் அதைத் தம்தோழர் கிராமாண்டியிடமிருந்து வந்ததாக அங்கிகரித்து நமக்கு அவசரமாயனுப்பிய விஷயங்களை அப்படியே கீழே பிரசுரிக்கிறோம். ஷ௸ பிரியாதுக்கு கட்டவேண்டிய கட்டணத்துக்காக வாதி தன் உடல் பொருளாவி மூன்றையும் ஒருங்கே தத்தம் செய்யவேண்டுமாம். இப்பிரியாது கிரமப்படியில்லையென்று 'பத்தாந் திருமுறை'ப்படி அதை யொழுங்கு படுத்திப் 'பிரார்த்தனை'கூட்டி 'குருசேவை' யென்னும் கோர்ட்டு முத்திரைபதித்து 'அனுபவ உறுதி' என்னும் மேல் தீர்ப்புப் பெற்று 'ஆநந்தவாழ்த்து' என்னும் நிறைவேற்றுபடியும் கட்டி வந்த பத்திரத்தை அத்தனருளால் அப்படியே பிரசுரிக்கிறோம். மற்ற விவரம் பின் வருவனவால் தெரியவரும்-வி-சி-ப-ர்.]

அந்த வருஷம் வந்தமாசம் இந்தத்தேதியில் பிரியாது கொடுத்த வாதியாகிய நம்சொந்த ஆத்மாதனுக்கு சிதம்பரவாசி சச்சிதாநந்தப்பிள்ளை கொடுத்த பாரோலை :—

"ஆனந்தத்தாயாரை அறிவாயே யாமானல்
இப்பாரோலை கொண்டு அவளைப் பணிந்திடு நீ
நீ பரதேசியாகிப் பத்தியுடன் பணிந்தை யானல்
உன் பத்திக்குத் தக்கபடி படியளிப்பாள் நிச்சயம்போ!"

உள்ளடக்கம்—1 - திருமுகம்.

---

ஓம். சத்குருவே நம:

ஆனந்தத்தாயாரே ஆண்டிகளுக் கடைக்கலமே
அருமையா யுன்வயிற்றில் அவதரித்த குழந்தையவன்
சச்சிதாநந்தம் சரணம் சரணமம்மா.

"நீ விண்டதெதுவானாலும் வெட்டவெளியானாலும்
"குடியிருந்த வீடதனைப் பாழதனா யாக்காதே
"பிச்சைக்குப்பைக்காரன் எச்சில்தின்னி யென்றிராமல்
"எல்லாரையுங் கவனித்து எவரெவர்க்கு முரியதை யீய்."—
என்றுசொல்லி நீயெனக்கு எடுத்துரைத்த வார்த்தையது
சிறிதும் தவறாமல் சிறுபிழையும் செய்யாமல்
ஆதரவாயுன் வார்த்தைப்படி யழிவுறாமல் நானடந்தேன்.

இப்படி நானிருந்து நடந்துவருங் காலையிலே
உன்னுபதேசந் தான்பலித்து உச்சத்திருக்கையிலே
அனுபவமுங்கைகூடி யாநந்தித்திருக்கையிலே,
திட்டக்குடியனும் திதிலாருள்வசனும்
நடராஜா பிள்ளையாம் நாட்டிலுள்ள வித்தகனும்
சபை யொன்று கூட்டுவித்து சதிராயதைநடத்தி
விசுவநாத ஐயரவர் விமரிசையாய்த் தலையிருக்க
ஊரிலுள்ள உத்தமர்கள் உத்தியோகர் பலபேர்கள்
பள்ளியிற் படிக்கும் பாலர் பலபேர்களுக்கு
வித்தையது போதிக்கும் வேதியர் குழாநடுவில்
கூட்டமது கூடிக் குலாவி மகிழ்ந்திருக்க
ஊருக்கதிகாரி ஊனர்க்கடியனவன்
'பிரியாது' ஒன்றெழுதிவந்து படித்தான் சபைமுன்னே :
அற்புதப்பிரியாததனை அடியிலே வரைந்துள்ளேன் :
பராபரன் தீர்ப்பதனை பாரித்துப் பெறவேண்டும்.—
என்றுசொல்லி யென்னப்பன் நடராஜன் பிள்ளையவன்
பாரோலை யெழுதிவிட்டுப் பரிந்து நின்றான் என்முன்னே.
சபாநாயகர் உத்தரவால் சதிராயவன் எழுதிவிட்டான்.
எழுதிவிட்ட ஓலைதனை எந்திரான் படிக்குமுன்னே
உன்கருணையாலே உளவறிந்து பதில் வரைந்தேன்.
பராபரன் செய்தீர்ப்பதைப் பாரிலுள்ளோரறியவெண்ணி
என்னென்னமாய மியற்றுவையோ நானறியேன்
என்னென்ன செய்கினுநீ ஏதேதியற்றிடினும்
உன்பிள்ளை யுன்னடிமை யுனக்கோ னர்ப்பணம்காண்.
மாயாண்டிப்பிள்ளைக்கு மாதாவா முன்றனக்கு
ஏழைபரதேசிகளை இரக்ஷித்தல் கடனன்றோ !
ஆத்மநாதனும் ஆடவன் பிரியாது தனை
ஆணவமலம்போக்கி ஆதாவாய்ச்சீர்திருத்தி
ஆக்ஷேபவிக்ஷேபங்களை அன்புடனே நீக்கிவைத்து
ஸ்வரூபதெரிசனந்தந்து ஸ்வானுபவமளிக்க
மாயாண்டிப் பிள்ளையிடம் மாற்றிவிட்டேன் அம்மணிநான்.
மாற்றிவிட்ட செய்திதனை மர்மமாய்த் தெரிவித்தேன்
மர்மமாய்த் தெரிவித்தபின் மறுமாற்றமுண்டோ சொல்.—"ஓம் தத்ஸத்."

---

திருஆதித்தாய்மொழி.— "குழந்தை சா- மா- க்கு ஸதாநந்தம் உண்டாகுக. காயிதம் பார்த்தேன். நீயே ஆனந்தரூபி. நீயேசத்தியரூபி. நீயேசக்திரூபி. நீயேசிவரூபி. அரூபிநீயே. விரூபிநீயே. எல்லாம் உனைத்தவிர ஒன்றுமில்லை. உன் சங்கல்பத்தால் ஜகம் உண்டானது. உன் சங்கல்பத்தால் ஜகம்அழிந்தது. தைரியங் கொள். சஞ்சலத்தை விடு. ஆனந்தமாயிரு. ப்ரக்ஞானமடை.—தாய்-பொருளானந்தம்." "தத்துவமஸி."

உ

ஓம்.

# ஸ்வானுபவம்—ஆத்மானந்தப்பூர்த்தி.

---

### சிவதெரிசனம்.

" சிந்தையதென்னச்சிவனென்னவேறில்லை
சிந்தையினுள்ளேசிவனும்வெளிப்படுஞ்
சிந்தைதெளியத்தெளியவல்லார்கட்குச்
சிந்தையினுள்ளேசிவனிருந்தானே."

### சிவசோருபதரிசனம்.

" துரியவதீதஞ்சொல்லுறும்பாழாம்
அரியதுரியமதீதம்புரியில்
விரியுங்குவியும்விள்ளாமலிருந்தன்
னுருவுந்திரியுமுரைப்பதெவ்வாறே."

### மோனசமாதீ.

" தானுமழிந்துதனமுமழிந்துநீ
டூனுமழிந்துவுயிருபழிந்துடன்
வானுமழிந்துமனமுமழிந்துபின்
நானுமழிந்தமைநானறியேனே."

" ஒன்றிநின்றுள்ளேயுணர்ந்தேன்பராபரம்
ஒன்றிநின்றுள்ளேயுணர்ந்தேன்சிவகதி
ஒன்றிநின்றுள்ளேயுணர்ந்தேனுணர்வினை
ஒன்றிநின்றேபலவூழிகண்டேனே."

### வரையாட்சி.

" தான்வரைவற்றபினுரைவரைவது
தானவனானபினுரைநினைவது
காமனைவென்றகண்ணுரையுகப்பது
தூமொழிவாசகஞ்சொல்லுமினீரே."

### உரைமாட்சி.

" உரையற்றதொன்றையுரைசெய்யுமூமர்காள்
கரையற்றதொன்றைக்கரைகாணலாகுமோ
திரையத்தநீர்போல்சிந்தைதெளிவார்க்குப்
புரையற்றிருந்தான்புரிசடையோனே."

### மனமாட்சி.

"மனமாயைமாயையிம்மாயையமயக்க
மனமாயைதான்மாயுமற்றொன்றுமில்லை
பிணைமாய்வதில்லைபிதற்றவும்வேண்டாந்
தனையாய்ந்திருப்பதுதத்துவந்தானே."

### முத்தி.

"மனம்விரிந்துகுவிந்ததுமாதவம்
மனம்விரிந்துகுவிந்ததுவாய்வு
மனம்விரிந்துகுவிந்ததுமன்னுயிர்
மனம்விரிந்துரைமாண்டதுமுத்தியே."

### அணைந்தோர்தன்மை.

"ஒழிந்தேன்பிறவியுறவென்னும்பாசங்
கழிந்தேன்கடவுளுநானுமொன்றானே
னழிந்தாங்கினிவருமார்க்கமும்வேண்டேன்
செழுஞ்சார்புடையசிவனைக்கண்டேனே."

"ஆராலுமென்னையமட்டவொண்ணாதினிச்
சீரார்பிரான்வந்தென்சிந்தைபுகுந்தனன்
சீராடியங்கேதிரிவதல்லாதினி
யார்பாடுஞ்சாராவறிவறிந்தேனே."

"ஒன்றுகண்டீருலகுக்கொருதெய்வமு
மொன்றுகண்டீருலகுக்குயிராவது
நன்றுகண்டீரினிநமசிவாயப்பழந்
தின்றுகண்டேற்கிதுதித்தித்தவாறே."

"பணிந்துநின்றேன்பரமாதிபதியைத்
துணிந்துநின்றேனினிமற்றொன்றும்வேண்டே
னணிந்துநின்றேனுடலாதிப்பிரானைத்
தணிந்துநின்றேன்சிவன்தன்மைகண்டேனே."

### தோத்திரம்.

"மாயனைநாடிமனநெடுந்தேரேறிப்
போயினநாட்டறியாதேபுலம்புவர்
தேயமுநாடுந்திரிந்தெங்கள்செல்வனை
காயமின்னாட்டிடைக்கண்டுகொண்டேனே."

"புகுந்துநின்றானெங்கள்புண்ணியமூர்த்தி
புகுந்துநின்றானெங்கள்போதறிவாளன்
புகுந்துநின்றானடியார்தங்கணெஞ்சம்
புகுந்துநின்றானையேபோற்றுகின்றேனே."

"உணர்வுமவனே யுயிருமவனே
புணர்வுமவனேபுலனுமவனே
யிணருமவன்தன்னை யெண்ணலுமாகான்
றுணரின்மலர்க்கந்தந் துன்னிநின்றானே."—திருமந்திரம்.

பிரார்த்தனை.

"அதுவென்றா லெதுவெனவொன் றெடுக்குஞ் சங்கை
யாதலினா லதுவெனலு மறவேவிட்டு
மதுவுண்ட வண்டெனவுஞ் சனகனாதி
மன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தாரென்றும்
'பதிவிந்த நிலை'யெனவு மென்னையாண்ட
படிக்குநிரு விகற்பத்தாற் பரமானந்த
கதிகண்டு கொள்ளவுநின் னருள்கூர் இந்தக்
கதியின்றி யுறங்கேன்மேற் கருமம்பாரேன்."—தாயுமானவர்.

குருசேவை.

தந்தேன் தடையறுத்தேன்
வெந்தேன் வினையறுத்தேன்
கொன்றேன் கொலையறுத்தேன்
குருசேவை செய்திட்டேனே.

அனுபவ உறுதி.

பெற்றேன் பெற்றேன் பெறலரும் பேறுபெற்றேன்
உற்றேன் உற்றேன் உம்பர்உறா உவகையுற்றேன்
அற்றேன் அற்றேன் அகமெனும் பாவமற்றேன்
பற்றேன் பற்றேன் பவமவ மினிப்பற்றேனே.

நின்றேன் நின்றேன் நிருவிகற்ப நிலையில்நின்றேன்
கொன்றேன் கொன்றேன் குரங்கெனு மனதைக்கொன்றேன்
வென்றேன் வென்றேன் வெறிதரு மயலைவென்றேன்
ஒன்றேன் ஒன்றேன் ஒருமைநிலை குலைவொன்றேனே.

ஆநந்தவாழ்த்து.

போற்றி போற்றி ஜயஜய போற்றி
போற்றி போற்றி பரம்பொருள் போற்றி
போற்றி போற்றி சத்தியம் போற்றி
போற்றிபோற்றி சத்குரு பாதம்போற்றி.

---

"முத்தனைமுதற்சோதியை முக்கணப்பனை முதல்வித்தனைச்
சித்தனைச்சிவலோகனைத் திருநாமம்பாடித்திரிதரும்
பத்தர்காளிங்கேவம்மினீருங்கள்பாசந்தீரப்பணிமினோ !
சித்தம்ஆர்தரும்சேவடிக்கணஞ்சென்னிமன்னித்திகழுமே."

"என்பேஉருகநின்னருள் அளித்துன் னிணைமலர் அடிகாட்டி
முன்பேஎன்னை ஆண்டுகொண்ட முனிவா! முனிவர் முழுமுதலே!
இன்பே அருளிஎனை உருக்கி உயிருண்கின்ற எம்மானே!
நண்பே அருளாய் என்னுயிர் நாதா! நின்னருள்நாணுமே."—திருவாசகம்.

ஓம் தத்ஸத்.
ப்ரம்மார்ப்பணமஸ்து.

---

பின்னுரை.

"காட்டுக்குறியுங்கடந்தவர்காரணை
மேட்டின்புறத்திலெழுதிவைத்தென்பயன்
கூட்டுங்குருநந்திகூட்டிடினல்லாது
வாட்டின்கழுத்திலதார்கிடந்தற்றே."

"தற்பரமல்லசதாசிவன்றானல்ல
நிட்களமல்லசகளநிலையல்ல
அற்புதயாகியனுபோகக்காமம்போற்
கற்பனையின்றிக்கலந்துநின்றானே."

"முகத்திற்கண்கொண்டுகாண்கின்றமூடர்காள்
அகத்திற்கண்கொண்டுகாண்பதேயானந்தம்
மகட்குத்தாய்தன்மணாளனோடாடிய
சுகத்தைச்சொல்லென்றாற்சொல்லுமாறெங்ஙனே."

"அருள்பெற்றவர்சொல்லவாரீர்மனிதர்
பொருள்பெற்றசிந்தைப்புவனபதியார்
மருளுற்றசிந்தையைமாற்றியருமைப்
பொருளுற்றசேவடிபோற்றுவனே." —திருமந்திரம்.

சாத்விகசிரோமணி-மாயாண்டிப்பிள்ளை.

ஓம் தத்ஸத்.
சுபமஸ்து.

INDIAN FOLK SONGS OF SPIRITUAL TRUTH & WISDOM.

"THE MYSTIC SONG OF THE MENDICANT ASCETIC."

ஓம்.ஸ்ரீபிக்ஷாடன மூர்த்தியேநம.

மார்கழிமாசம் காலையில்பாடும் ஆண்டிப்பாட்டு.

## மாயாண்டிச்சித்தன் ஞானப்பாட்டு.

---

களம்.—தவவேடர் அகத்துமுகடு.

நட்டர்.—மோகினி - பிக்ஷாடனர்.

இராகம்.—ஆனந்த பைரவி. சாப்புதாளம்.

நாதம்.—கண் - கண்ண - கணகண்ண.

1. ஆண்டி யாவது ஆண்டி
[1]ஆணவம் போக்குவ னாண்டி
[2]அருள் தருபவ னாண்டி
[3]மருளும் போக்குவ னாண்டி.
நாதம்.—கண்-கண்ண-கணகண்ண.

2. ஆண்டி யாவது ஆண்டி
[4]ஆடு மேய்ப்பவ னாண்டி
[5]விட்டால் பிடிப்பவ னாண்டி
[6]வீடு மளிப்பவ னாண்டி.
நாதம்.—கண்-கண்ண-கணகண்ண.

3. ஆண்டி யாவது ஆண்டி
[7]மாண்டு மடிந்தா லாண்டி;
மாண்டு விழுந்தால் தோண்டி[8]
மாயவ னுமவ னாண்டி.
நாதம்.—கண்-கண்ண-கணகண்ண.

4. மயாவ னுமவ னாண்டி
மாக்ஷிமை பெற்றனை வேண்டி

---

1. அகச்செருக்கு, மும்மலத்தில் ஒன்று. மற்றவை (1) மாயை (2) காமியம்.
2. கிருபை.
3. மயக்கம் - அறியாமையினஞ்சல்.
4. ஆடு=பசு=மன்னுயிர். "கோபாலன்".
5. பற்றுவிட்டால். f, "பற்றற்றார் பற்றுகப்பற்றி நிற்பனவன்."
6. முத்தி - மோக்ஷம்.
7. அகங்காரமமகாரங்கள் மாண்டுமடிந்தால்.
8. தோண்டி=ஹிருதயம் - உட்பற்று - விஷயவாசனை.

[9]மாயை மயக்கந் தாண்டி
[10]மனதையுஞ் சுட்டேன் காண்'டி.

நாதம்.—கண்-கண்ண-கணகண்ண.

5. [11]ஒட்டின விட்டிடி லாண்டி
புளியோடுபோ லிருப்பனே யாண்டி ;
[12]கட்டின விட்டிடி லாண்டி
[13]யதைக்காட்டிக் கொடுப்பனே யாண்டி.

நாதம்.—கண்-கண்ண-கணகண்ண.

6. ஆண்டி யாமவ னுண்டி
ஆட்கொண் டானென்னை வேண்டி
ஆருக்கு மடங்கேனன் சண்டி[14]
அருவுரு வாஞ்சக சண்டி.[15]

நாதம்.—கண்-கண்ண-கணகண்ண.

7. மாயமாய் வந்தானே யாண்டி
காயம் புகுந்தானே காண்'டி
சண்டி சகசண்ட்'யைத் தோண்டி[16]
[17]மண்டி யெரித்தானே யாண்டி.

நாதம்.—கண்-கண்ண-கணகண்ண.

8. மண்டி யெரித் தீயில்-மன்மதனை யெரித்தாண்டி,
சண்டி யகங் காரம்-சாகவே யழித் தாண்டி,
ஒண்டி யொளித் தருவா-யொதுங்கியே யிருந் தாண்டி
அண்டி யணைத் தென்னை-அலங்கோலம் செய் தான்'டி.

நாதம்.—கண்-கண்ண-கணகண்ணக்-கண்-கண்ண-கணகண்ண.

---

9. பிரபஞ்சம் சத்தியம்போல் தோற்றும் பொய்த்தோற்றம்.

10. மனோவிர்த்தியை யொழித்து விஷயவாசனைகள் நீங்கி அசைவற்றிருத்தலே மனதைச் சுட்டெரித்தலாம். விஷயவாசனையிருந்தால் இந்த தேகம் விழுந்தாலும் மனம் வேகாது. "நான்செத்தாலும் என் நெஞ்சு வேகாது" என்று உலக வழக்கத்தில் சொல்லும் உண்மையிதுவே.

11. பாவனாரூபமாக ஆத்மாவை யொட்டியுள்ள உலகவாசனைகள்.

12. ஆத்மாவைப் பிறவிக்கடலிலாழ்த்திக் கட்டிய கர்மபந்தங்கள்.

13. அதை=ப்ரம்மத்தை - சத்யத்தை - உண்மையை-அழியாதசைவற்று நிற்பதை.

14. "நான்" என்னும் சீவ அகங்காரம் : அதை வெல்வது மஹா கஷ்டம். என்ன அடித்தாலும், அடக்கினாலும் போகாதபிடிவாதப்பேய். அது வெகு முரடு.

15. மஹத் அகங்காரம் - இந்த சகமெல்லாம் நான் ; இதைப்படைத்துக்காத்து ஆள்பவன் நான், என்று கண்ணுக்குக் காணாத உருவாயிருக்கும் ; இதை ஈசுவரன் என்று சீவர்கள் தொழுவார்கள். முத்தர்களை இது பாதிக்காதாயினும் பெத்தர்களைப் பாதிக்கும் சக்தி இதற்கு மெத்தவு முண்டு.

16. தோண்டி=வேரோடு கிண்டியெடுத்து - வாசனையோடுநீக்கி.

17. காட்டுத்தீபோலெல்லாவற்றையும் தகனம் செய்யும்படி உத்கிர்ஷ்டகாந்தியோ டெரியுந்தீ - மண்டியெரி நெருப்பாம்.

9. அழ அழ என்னை-யகலாது கட்டி னான்'டி
கட்டின கட்ட திலே-கட்டவிழச் செய் தான்'டி
சண்டித் தனம் செய்தே-சாகஸம் செய் தாண்டி
கூடிக் கலந்தே யென்-குலமழியச் செய் தான்'டி

நாதம்.—கண்-கண்ண-கணகண்ணக்-கண்-கண்ண-கணகண்ண.

10. குலமு மில்லை யினிக்-கோத்திரமு மில்லை யேடி,
ஊனில்லை உறவு மில்லை-ஒன்று மில்லை யெனக்கேடி;
மலமில்லா வூரி லுண்டு-மாயை யில்லா வீட்டமொடி,
[18]சலனமில்லாச் சயனத் தங்கு-சயனித் திருப் பேனடி.

நாதம்.—கண்-கண்ண-கணகண்ணக்-கண்-கண்ண-கணகண்ண.

பேரிரைச்சலிட்டுப் பிக்ஷையிரத்தல்.

அம்மா ஆ !-பிட்சையா அண்டி-உயிர்போ ஒருது !
அம்மா ! ஊனமில்லாஉணர்வு-ஒருகொடிதாயேன் !
உயிர்ப்பிச்சையம்மா ! ஊனுணர்வுவேண்டேன், தாயே !!
ஆண்டிப்பிச்சையம்மா ! அம்மணமாக்கொடுக்கணும், தாயே !!

நாதம்.—கண்-கணார் !-கணகண்ணர்-கணகண்ணக்-
கண் !-கணகண்ணக்-கணகணார் !
கணகண்ணக்-கண்ணக்கண்ண-கணார் !!
கணகண்ணக்-கண்ணக்கண்ண-கணார் !!

ஆகாசத்தில் அசரீரிவாக்கு.

"மோகினி ராகம் பாடத்
[19]திரிபுடி தாளம் போடத்
தவவேட ராட்ட பாட்டம்
தரணியி லொடுங் கிற்றையே."

"மார்கழிமாசத் திருவாதிரையும் - வரலாயிற்றையே
கார்குழலாள்மோகினியும் காரணப்பே - யாண்டியுமே கரைந்தவுறுமாறிநின்று
பாரிலுள்ள பக்தர்கள் பரிபக்குவர் - பலருமுய்யப் பரங்கருணைமிகுதியாலே
திரிபுரமெரித்த தேஜோமயானந்தனைத் - தாள்கொடுத்தருள்வன், தரிசிக்கவாரீர், வாரீரே."

ஓம். ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து.

18. சலனமில்லாச் சயனம் - சர்ப்பசயனமேயாம். அசைவற்றிருக்கும் ஆதிமுதலின் சமாதிநிலை.

19. ஞாதருஞானஞேயம் - பார்ப்பவன், பார்வை, பார்க்கப்படும் வஸ்து இம்மூன்றிற்கும் 'திரிபுடி' யென்றுபேர். ஆசாபாச விஷயங்களெல்லா மிதிலடங்கும்.

IN MEMORIAM:

MY FATHER IN HEAVEN.

# எந்தை-முத்தி.

யாக்கை நிலையாமை.

"ஊரெலாங்கூடி யொலிக்கவழுதிட்டுப்
பேரினைநீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங்காட்டிடை கொண்டுபோய் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந்தார்களே."—திருமூலர்.

"வளத்திடை முற்றத்தோர் மானிலமுற்றுங்
குளத்தின் மண்கொண்டு குயவன்வனைந்தான்
குடமுடைந்தாலவை யோடென்றுவைப்பர்
உடலுடைந்தாலிறைப்போதும்வையாரே."—திருமூலர்.

பேறற்பேறு.

எந்தையவ னென்னப்பன் என்காய மீன்றவன்றான்
கந்தையது கழித்ததன்ன கனகாயம் நீங்கிச்சென்றான்*
சிந்தைவெந்தே யெய்தின"நான்"† சிவனடியே சேரவைத்தேன்
எந்தையவ னென்னீசன் எனையுமங்கே யிருதியென்றான்.

இருதியென்றான் வாழ்தியென்றான் இருவினையுமறுத்துவிட்டான்
சுருதிமுடிவை யறிதியென்றான் சுகமதுவு மிதுவேயென்றான்
கருதியதை யுரைசெய்யக் கருத்தழிந்தே னென்செய்வேன்
வருதியென்று னிருத்திவிட்டான் வகையறியா திருந்துவிட்டேன்.

—ஸ்வாமிநாதன்.

அன்பதுவாதல்.

"கண்டேன்கமழ்தரு கொன்றையினனடி
கண்டேன்கரியுரியான்றன் கழலிணை
கண்டேன்கமல மலருறைவானடி
கண்டேன்கழலதெ னன்பினுள்யானே."—திருமந்திரம்.

"ஈசனறியுமிராப்பகலுந்தன்னைப்
பாசத்துள்வைத்துப் பரிசுசெய்வார்களை
தேசுற்றறிந்து செயலற்றிருந்திடி
லீசன்வந்தெம்மிடையீட்டி நின்றானே."—திருமந்திரம்.

ஓம்தத்ஸத்.

* சுபகிருது௵ அற்பிசி௴ 27உக்கு 1902-ம்௵ நவம்பர்௴ 12உ,

† "நான்" = ஜீவஅகங்காரம் = ஜீவன்,

# Truth according to St. John.

## As perceived by a Son of God in the Vedic Land of Ind.

"God is Spirit and they that worship Him must worship in spirit and truth"—John IV - 24.

"The one only way of worshipping Him in this manner is by isolating yourself from the limitations of thought & sense perception. By this isolation you become *atone with* God—you, a cleansed spirit are allowed, to be *in union with* God. Then indeed are you said to *know* God spiritually as Eternal Be-ing."—St. Paul.

"Jesus gave up his life that he might gather together in one the children of God that were scattered abroad." John—XI-52.

"Verily, verily, I say unto you, except a corn of wheat fall into the ground and die, it abideth alone, but if it die, it bringeth forth much fruit."—Christ.

"And I, If I be lifted from the earth, will draw all *men* unto me."—ib.

"While ye have light, believe in the light, that ye may be the children of light."—ib.

"O Father, Lord of heaven and earth, Thou hast hid these things (mysteries of the Kingdom of Heaven) from the (worldly) wise and prudent and hast revealed them unto babes."—Mathew XI-25.

"All things are delivered unto me of my Father: and no man knoweth the Son, but the Father; neither knoweth any man the Father, save the Son, and he to whomsoever the Son will reveal Him.—" Matt. XI—27.

"Come unto me, all ye that labour and are heavy laden, and I will give you Rest."—Matt. XI-28.

"Take my yoke upon you and learn of me; for I am meek and lowly in heart: and ye shall find rest unto your souls. For my yoke is easy and my burden is light."—Matt. XI-29-30.

"These things I have spoken unto you that in me ye might have peace. In the world ye shall have tribulation, but be of good cheer: I have overcome the world." John—XVI-33.

"Father, the hour is come, glorify thy Son, that thy Son also may glorify thee: as thou hast given him power over all flesh, that he should give eternal life to as many as thou hast given him."—John XVII-1-2.

"I certify you, brethren, that the Gospel which is preached by me is *not after man*; for I neither received it of man, neither was I taught it by man."—St. Paul.

## * "ஏகம் சத்தியம் ப்ரஹ்ம".

"ஆனசமயமதுவிதுநன்றெனு
மாயமனிதர்மயக்கமதுவொழி
கானங்கடந்தகடவுளைநாடுமின்
ஊனங்கடந்தவுருவதுவாமே."

"அகன்றூர்வழிமுதலாதிப்பிரானு
மிவன்றானெனநின்றெளியனுமல்லன்
சிவனருள்பலபலசீவனுமாகும்
நயன்றான்வரும்வழிநாமறியோமே."

"கரந்துங்கரந்திலன்கண்ணுக்குத்தோன்றான்
பரந்தசடையன்பசும்பொன்னிறத்தன்
அருந்தவர்க்கல்லாலணுகலுமாகான்
விரைந்துதொழப்படும்வெண்மதியானே."

"தவம்வேண்டுஞானந்தலைப்படவேண்டில்
தவம்வேண்டாஞானசமாதிகைகூடில்
தவம்வேண்டாமச்சகசமார்க்கத்தோர்க்குத்
தவம்வேண்டாமாற்றந்தனையறியாரே."

"சாத்திரமோதும்சதிர்களைவிட்டுநீர்
மாத்திரைப்போதுமறித்துள்ளேநோக்குமின்
பார்த்தவிப்பார்வைபசுமரத்தாணிபோல்
ஆர்த்தபிறவியகலவிட்டோடுமே."

"ஒடுங்குநிலைபெற்றவுத்தமருள்ளம்
நடுங்குவதில்லைநமனுமங்கில்லை
யிடும்பையுமில்லையிராப்பகலங்கில்லை
படும்பயனில்லைபற்றுவிட்டார்க்கே."

"இதயத்துநாட்டத்துமென்றன்சிரத்தும்
பதிவித்தபாதம்பராபரநந்தி
கதிவைத்தவாறுமெய்காட்டியவாறும்
விதிவைத்தவாறும்விளம்பவொண்ணாதே."

"வைத்தேனடிக்கண்மனத்தினுள்ளேநான்
பொய்த்தேயெரியும்புலன்வழிபோகாம
லெய்த்தேனுழலுமிருவினைமாற்றிட்டு
மெய்த்தேனறிந்தேனவ்வேதத்தினந்தமே."

—திருமந்திரம்.

* இது சுருதிவாக்கியம், "அது ஒன்றே: என்று மழியாதது; ஜீவ வியாபகமானது அல்லது எங்கும் பரவியுள்ளது" என்பது இதன் பொருள்.

GOD'S PLAN OF THE UNIVERSE.

THE ETERNAL LAW OF EVOLUTION, INVOLUTION AND SALVATION.

(As Perceived in Realisation thro' Atma-Yoga.)

# ஜகத் - ஸிஷ்டி.

## உற்பத்தி லய ரக்ஷணமுறை.

யோகமார்க்கம்.

### i. உற்பத்தி-லயம். EVOLUTION AND INVOLUTION.

JOHN I. * 1—5.

1. In the beginning was the Word, and the Word was with God, and the Word was God.

1. ஆதி—God or First Cause.

ஆதியிலுள்ளானாதிபொன்றே
ஆதியனாதியுமவனேயாவன்
அனாதியாமவனாதியதாக
ஆதியிற்பிறந்தது நாதந்தானே.

2. The same was in the beginning with God.

2. நாதம்—Word or Logos.

நாதமுநாதாந்தமுமொன்றே
ஆதியிலநாதம் அனாதியிலொடுக்கம்
ஆதியனாதிபோல் நாதமனாதி
ஆதியுநாதமும் அனாதிதானே.

3. மாயை—Maya or Darkness.

அனாதியானது மாயையுங்காணீர்:
ஆதியுநாதமும் மாயைபிற்கூடிட
ஆனதனைத்தும் ஆயதுஅதனால்;
ஆயதனைத்துமாக்கிய அவனும் மாயவனாகமாறிநின்றானே.

3. All things were made by him; and without him was not any thing made that was made.

4. சகஉற்பத்தி—Evolution of the world.

மாறிநின்ற மாயவன்தானே
காரணகாரிய உபாதனமானான்
மாயையென்பது மருளும்தெருளும்
தெளிந்தார்க்கிலதாம் தெளியார்க்குளதாம்.

5. மாயாவியல்—Nature of Maya.

உளதாமதவு முள்ளத்து தானே
உள்ளத்துணர்வை மறைத்திடுமதுவும்
மறைவழிப்பட்டு மனந்தெளிந்தக்கால்
இருந்தவிடந் தெரியாதெடுத்திடுமோட்டமே,

* For a full exposition of the Truth contained in these passages *vide* Paranandа's commentary in full. A few extracts bearing on John I. 1, 2 are given in pp. 213 & 214.

6. ஆள்பவன்—Saviour.

ஓட்டமெடுக்கும் உண்மையுணர்ந்தார்க்கது
வாட்டமிகச்செய்யும் உண்மையுணரார்க்கது
வாட்டமும்ஆட்டமும் வாய்வுமனமாகும்
ஆட்டியும்காட்டியும் ஆள்பவன்எந்தையே.

4. In him was life; and the life was the light of men.

7. உள்ளத்தன்—Immanent.

எந்தையவன்தானும்என்னுளேயிருந்தான்
என்னுளிருந்தானை நானுமறிந்திலன்
அறிந்திடாக்காரணமாய்ந்து பார்த்திட
பார்வையைத்தடுத்ததுமாயையென்றுணர்ந்தேன்.

8. அவித்தை—Ignorance or Mixed light.

உணர்ந்த உள்ளத்தில் ஒளிவிட்டு நின்றானை
உணராதொளித்தது உள்நின்றமாயை
உணர உணர ஒளிந்தது மாயையும்
உணராதொளித்த அம்மாயை அவித்தையே.

9. அதனியல் –Same dissected.

அவித்தையாலே யறிகிலேன் எந்தையை
அவித்தையதுவும் அறிவறியாமையே
அவித்தையை யாய்ந்திடினது விரண்டாகும்
அவித்தையாய்நிற்பதாவரணவிக்ஷேபந்தானே.

10. விக்ஷேபம்—Sensation.

விக்ஷேபமென்பது விஷயசுகவிர்த்தியாம்
விக்ஷேபமென்பது உடலுண்மையென்றிடும்
விக்ஷேபந்தானே யுள்ளுணர் வொளிக்கும்
விக்ஷேபத்தாலே வீடுபெறுதலைவனே.

11. ஆவரணம்—Illusion.

அலைவன் நான் என்பதறிந்துள்ளபோதும்
அலைவன் நான் அப்போதாத்மாவென்றிருந்தும்
அலைவனுக்காத்மாவைக்காட்டியொளித்திடும்
அலைவனுள்ளமர்ந்ததாம் ஆவரணந்தானே.

5. And the light shineth in darkness;

12. அதன்தொழில்—How it acts.

ஆவரணம்தானேயனைத்துமென்றுரைக்கும்
ஆவரணந்தானே ஆத்மாவையொளிக்கும்
ஆவரணந்தானேஅறிவையுள்ளொடுக்கும்
ஆவரணம் தானேதனைக்காணுதழச்செயும்.

13. உவமானம்—Illustration.

அழச்செய்ததாவரண மாதிமனிதனை
விழச்செய்த ஆதியவள் விக்ஷேபந்தானே
அழகியவள் விஷயசுக ஆசையினாலே
விழச்செய்தாள் ஆடவனை ஆனந்தமழிந்தே.

14. உவமேயம்—Application.

அழிந்தேயவன்போனான் ஆத்மாவையறியாமல்
அழிந்தேயவன்வீழ்ந்தான் அரிவைசொற்கேட்டு
அழிந்தவன்ஆவரணம் அழித்தவள்விக்ஷேபம்
அழிந்தஆடவனோடழகியும் சேர்ந்தது அவித்தையாமே.

and the darkness comprehended it not.

15. ஜீவன்—Natural Man.

அவித்தையினுள்ளே ஆத்மன்ஒளித்துளான்
அவித்தையினாலே ஆத்மனைஉணர்கிலார்
அவித்தையினுள்விளங்குள்ளொளிதன்னை
அவித்தையிருளால் அறிகிலன்சீவன்.

ஃ

## ii. இரக்ஷணமுறை—PLAN OF SALVATION.

16. அருளுதயம்—Merciful Thought.

அறிகிலாச்சீவனை அருளொடுகாத்திட
அறிவிலா துலகம் அழியா தருள்செய
அறிவிலாஊனர்கள் அறிவறிந்துய்ய
அறிவில்அருளா யவனுதித்தானே.

6. There was a man sent from God, whose name *was* John.*

17. அருளன்—Feeling of Mercy.

உதித்தானவனெந்தை ஊனர்தமுடலில்
உதித்தானவனென் றுணர்ந்திலருலகில்
உதித்தானவன் தன்னையுணர்த்துமா றுலகில்
உதித்தான் குரவர்குலதிலகனாய்த்தானே.

18. அழுக்காறுநீக்கம்—Cleansing the Heart.

தானேயுதித்தாண்டான் தனிமையிலவனைக்
கானேபுகுந்து கடுந்தவஞ்செய்தானை
ஊனேபுகுந்து உள்மலம்போக்கி
வானேபுகுந்திடும் வன்மையீன்றானே.

* John the Baptist was the son of the priest Zacharias (Luke-i-12-13) John retired to the desert early in life and practised severe austerity till he was "sent," (John i-6,) to announce the advent of the Teacher (Spirit of Grace and Truth) in the sacred form of Christ Jesus. (John i-14.)

